[5th November 1958

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No such complaints have been received.

SRI A. GOVINDASAMY : இந்த செயற்கை கருத்தரிக்கும் முறையை ஒவ்வொரு தேசிய விஸ்தரிப்புத் திட்டத்திலும் கொண்டு வருவதற்கு அரசாங்கம முயற்சி செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறுதான் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

SRI D. S. AUTHIMOOLAM : இந்த நாட்டிலே இருக்கும் கோடிக் கணக்கான கால்நடைகளுக்கு சரியான போஷாக்கு அளிக்கும் வகையில் மேச்சல் நில வசதி இல்லாமல் இருக்கும்பொழுது இந்த " ஆர்ட்டிபிஷியல் இன்செமினேஷன் " ஸ்கீமை கொண்டுவருவதன் நோக்கம் என்ன ? (சிரிப்பு.)

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நல்ல மாடுகளை வளர்க்கவேண்டுமென்பதற்காக இந்தத் திட்டம் மேற்கொள்ளப் பட்டிருக்கிறது.

*Leprosy Clinic at Ariyalur*

* 888 Q.—SRI S. M. ANNAMALAI (on behalf of Sri K. R. Viswanathan) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) whether there was a proposal to start a Leprosy Clinic at Ariyalur, Udaiyarpalayam taluk, Tiruchirappalli district; and

(b) if so, why it was not given effect to?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes, Sir.

(b) No suitable Government or private building is available at Ariyalur to house the Centre.

SRI M. K. SOMASUNDARAM : இந்த மாதிரி லெப்ரசி கிளினிக்குகளை தனிப்பட்ட முறையில் சர்க்கார் கட்டிடம் கட்டி ஆரம்பிக்கக் கூடாதா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: அந்த மாதிரியும் அநேக இடங்களில் கட்டப்பட்டு வருகிறது. இங்கே கட்டடம் கிடைக்காததினால் அந்த நிலையத்தை இங்கே வைக்கமுடியவில்லை.

*Car Accidents*

* 889 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சென்னை, கன்னியாகுமரி, தென்னாற்காடு, திருச்சி எல்லைகள் சந்திக்குமிடத்தில் ஆற்றின்மீது கட்டப்பட்டுள்ள பாலம் அணைக்கட்டு பக்கத்தில் உள்ள சாலையில் " எஸ் " ( S ) போன்ற வளைவில் கார்கள் அடிக்கடி மோதி விபத்துக்கள் உண்டாவது சர்க்காருக்குத் தெரியுமா ?

(ஆ) அந்த சாலையையும் பாலத்தையும் நேராக்க சர்க்கார் நடவடிக்கை எடுக்க ஏதேனும் உத்தேசமுண்டா ?

THE HON. SRI P. KAKKAN: (அ) கனம் அங்கத்தினர் கூறிய இடத்தில் 1953-ல் இருந்து ஒரே ஒரு விபத்துத்தான் ஏற்பட்டிருக்கின்றது. அது அரசாங்கத்திற்குத் தெரியும்.

(ஆ) இல்லை, ஐயா.

5th November 1958]

SRI N. R. THIAGARAJAN : இதுபோன்ற வளைவுகள் பல்வேறு இடங்களில் இருப்பதனால் விபத்துக்கள் உண்டாகின்றன. உசிலம்பட்டி கண்மாயில் நான் சென்னைக்கு வரும்போழுது இது போன்ற வளைவில் ஒரு விபத்து ஏற்பட்டதைப் பார்த்தேன். தென்னூறகாடு, தஞ்சை எல்லைகள் சந்திக்கும் இடத்தில் கூட ஒரு விபத்தை நேரில் கண்டிருக்கிறேன். ஆகவே, இந்த மாதிரி வளைவுகளை நிமிர்த்துவதற்கு வேண்டிய ஏற்பாடு களை அரசாங்கம் செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது எங்கெல்லாம் வளைவு கள் இருக்கின்றனவோ அந்த வளைவுகளை நிமிர்த்தி பஸ்கள் போவதற்குச் சௌகரியமாக ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. எனத முன்னதாக எடுத்துக்கொண்டு செய்ய வேண்டுமோ அதைச் செய்து வருகிறோம்.

SRI A. V. P. ASAITHAMBI : சென்னை நகரிலே தினசரி இந்த கார் விபத்துக்கள் நடப்பதினாலே, பல தெருக்கள் சந்திக்கிற ஒவ்வொரு இடத்திலும் "Stop and go" என்ற அறிவிப்புப் பலகையைப் போட்டால் இந்த விபத்துகளை ஓரளவுக்கு தடுக்க முடியுமா ?

MR. SPEAKER : இதற்கு கனம் அங்கத்தினர் தனிக்கேள்வி போட வேண்டும்.

THE HON. SRI P. KAKKAN : இப்பொழுது சில இடங்களில் போட்டிருக்கிறோம். எழுத்து மூலமாகக் கொடுத்தால் இதைப்பற்றி விசாரிக்க முடியும்.

*Building for Fisheries School in Vedaranyam Panchaayt Area*

* 890 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் முதல் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வேதாரண்யம் பஞ்சாயத்தைச் சேர்ந்த ஆறு கட்டித்துறை மீனவர் கள் பள்ளி புயலில் சமாளிக்கத் தக்க கட்டிடம் கட்டித்தரப் கோரியிருக் கிறார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes—The request is under the consideration of the Government.

SRI A. VEDARATHNAM : இந்த கிராமம் கடற்கரை ஓரத்தில் இருப்பதனால், சமீபத்தில் ஏற்பட்ட புயலில் 20 அடி கடல் தண்ணீரில் மூழ்கிப்போன கிராமம். அந்தப் பள்ளிக்கூடத்திற்கு "காண்டிரிபியூஷன்" கேட்கப்பட்டிருக்கிறது. ரொம்ப நாட்களாக பள்ளிக்கூடம் இல்லாததினால் அங்கேயுள்ள குழந்தைகள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே இதை உடனடியாக எடுத்து வேலை செய்வதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கலெக்டர் அவர்களிட மிருந்து ஒரு ரிப்போர்ட் கேட்கப்பட்டிருக்கிறது. வந்தவுடனே முடிவு செய் யப்படும்.

*Petition by Kalathur village munsif*

* 891 *Q.*—SRI K. ANBAZHAGAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

களத்தூர் கிராம முனிசிப் கொடுத்த ஒரு மனுவை சாக்கோட்டை சப்-இன்ஸ்பெக்டர் ஏற்க மறுத்தார் என்பது உண்மையா ? அந்த மனுவை ஏற்காததால் கிராம முனிசீப், வரி வசூலிக்க இயலாது போனது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The answer is in the negative.